# பாகம் - 10

# ருத்ராட்சம் அணிவது பற்றி சிவபுராணம்



பஞ்சாட்சர மந்திரங்களை உச்சரித்தல்,திருநீறு தரித்தல்,ருத்ராட்சம் அணிதல் இம்மூன்றையும் ஒருவன் ஒருசேர செய்வது: திரிவேணி சங்கமத்தில் நீராடுவதன் புண்ணியத்தைப் பெற்றுத்தரும்.ருத்ராட்சங்களை எண்ணற்ற அளவில் உடலில் தரித்துக் கொள்பவன்,மகேசனைப் போல அனைத்துத் தேவர்களாலும் தலை தாழ்ந்து வணங்கப்படுகிறான்.

ஒருவன் எவ்வகைப் பிறவி எடுத்திருந்தாலும் சரி, அவன் ருத்ராட்சத்தை அணிவானாகில்,நரகங்களிலிருந்து விடுபடுகிறான்.எவ்வகை வர்ணத்தை(ஜாதியை)ச் சேர்ந்தவனாக இருந்தாலும் சரி;எவ்வகை ஆசாரத்தைக் கடைபிடிப்பவராயினும் சரி; பெண்களாயினும் சரி; அவர்கள் 'ஓம் நமசிவாய' என்னும் மந்திரத்தை உச்சரித்து,ருத்ராட்சங்களை அணிந்து கொள்ளலாம்.




ருத்ராட்சத்தை ஒருவன்/ள் ஒரு பகலில் அணிந்திருப்பானாயின், அவன் இரவில் செய்த பாவங்களை அது எரித்துவிடும்.இரவில் அணிந்திருப்பானாகில் அது அவன் பகலில் செய்த பாவங்களை எரித்துவிடுகிறது.ஆதலால் ஒருவன் எந்நேரமும் ருத்ராட்சங்களை அணிந்து கொண்டிருக்க வேண்டும்.

ருத்ராட்சமும் திருநீறும் அணிந்தவன் ஒரு போதும் யமலோகம் செல்வதில்லை;

ருத்ராட்சம் அணிந்து ஒருமுறை எவ்வித மந்திரம் கூறினாலும்,அதை 1,00,00,000 முறை உச்சரித்த பலனைத் தரும்.ருத்ராட்சம் அணிந்து ம்ருத்யுஞ்ச மந்திரம் உச்சரிப்பவன் எல்லாவித நோய்களிலிருந்தும் விடுபடுகிறான்.அவனை அகால மரணமோ,துர்மரணமோ நெருங்குவதில்லை.